# வள்ளிச் சன்மார்க்கம்

*October 28, 2011*

**- முனைவர் கோ.ந. முத்துக்குமாரசுவாமி** 



**நா**தா குமரா நம: ‘ எனத் துதித்து மாணவக பாவத்தில் நின்று, ‘ஓதாய்’ எனக் கேட்ட அரனுக்குச் சாமிநாதனாய் குகப் பெருமான் உபதேசித்தது, இந்த வள்ளி சன்மார்க்கம் என்றார், அருணை முனிவர்.

> *“வள்ளிச் சன்மார்க்கம் விள்ளைக்கு நோக்க*
> *வல்லைக்கு ளேற்றும் இளையோனே” (திருப்புகழ் 317)*

(விள்ளை = விள்+ஐக்கு , கேட்ட தந்தைக்கு; நோக்க வல்லைக்கு – கண்ணிமைப்போதில், நொடியில்; ஏற்ற – மனதில் கொள்ளும்படி உபதேசிக்க)



**வ**ள்ளிச்சன்மார்க்கம் என்றால் வள்ளி கடைப்பிடித்த நன்னெறி என்று பொருள். இம்மார்க்கத்தையே திருஞானசம்பந்தர் நன்னெறி, அருள்நெறி, பெருநெறி என்று உரைக்கின்றார்.

**இ**ந்தச் சன்மார்க்கம், இம்மார்க்கத்தில் பயணிப்பவர்களை எங்கு அழைத்துச் செல்லும் என்பதை அருணை முனிவர் பலதிருப்புகழ்ப் பாடல்களில் தெளிவாக விதந்து ஓதுகின்றார்.

> *”நீவேறெ னாதிருக்க நான்வேறெ னாதிருக்க*
> *நேராக வாழ்வ தற்குன் னருள்கூற”*
> *(நாவேறு, சுவாமிமலைத் திருப்புகழ்)*

> *"இருவினைமு மலமுமற இறவியொடு பிறவியற*
> *ஏக போகமாய் நீயு நானுமாய்*
> *இறுகும்வகை பரமசுகம் அதனையருள் இடைமருதில்*
> *ஏகநாயகா"*
> *(திருவிடைமருதூர்த் திருப்புகழ், அருகுநுனி)*

இத்திருப்புகழ்களில் எல்லாம் உயிர் இறை எனும் இருபொருள்கள் உள்ளன; மங்கலம் அல்லது சிவம் எனப்படும் இறை இன்பவடிவானது, ஆனந்தமயமானது, அதனைத் துய்க்கும் உரிமை உயிர்க்கு உளது, அந்த இன்பத்தைத் தடுப்பது மும்மலங்கள், அவையாவன சகசமலம் எனப்படும் ஆணவம், ஆகந்துகம் எனப்படும் மாயை கன்மங்கள், இவை நீங்கினால் உயிர் இறையின்பத்தைத் துய்க்கும்; இறையின்பத்தைத் துய்க்க ஒட்டாமல் தடுக்கும் தடை நீங்கும், தடைநீங்கிய உயிர் சிவத்தைக் காணும், கண்டால் அதனுடன் தான்வேறு சிவம் வேறு என்று தோன்றாத வகையில் இரண்டற்ற நிலையில் ஏகபோகமாய் இறுக வேண்டும். அவ்வாறு இறுகும் நிலையில் முத்தியாகிய பரமசுகம் விளையும் அதுவே உயிர் அடைய வேண்டிய கதி என்பனவாகிய பொருள்கள் விளங்குகின்றன.



உயிரும் சிவமும் 'ஏக போகமாய் (நீயு நானுமாய்) இறுகும்வகை'யைச் சைவசித்தாந்தம் அத்துவித சம்பந்தம் என்கின்றது. அத்துவித சம்பந்தம் என்பது யாது? பேதமான பொருள்கள் இரண்டு தம்முள் அபேதமாதற்குரிய சம்பந்தம், அத்துவித சம்பந்தம். அந்த சம்பந்தத்தால் உயிருக்கு அழியாப்பரமானந்தம் விளைகின்றது. அதுவே முத்தி.

பொருள் இரண்டாக இருந்தும் பேதப்படுத்தும் குற்றம் நீங்கித் தம்முள் வேறறக் கலந்து நிற்கும் தன்மையே அத்துவிதம். அத்துவிதம் என்றால் ஏகம் அல்லது ஒன்று என்பது பொருள் அன்று; துவிதம் அல்ல, இரண்டல்ல ஒன்றுமல்ல என்பதுதான் பொருள்.

சிவமும் உயிரும் இரண்டும் சித்து அதாவது அறிவுடையன என்பதால் ஓரினத்தன எனினும் சிவம் அருளும் சித்து, உயிர் அருளினைச் சேரும் சித்து; சிவம் முற்றறிவுடையன், சர்வஞ்ஞன்; உயிர் சிற்றறிவினன், கிஞ்சிஞ்ஞன். சிவம் தானே அறிவன்; சிவன் அறிவிக்க உயிர் அறிவன். சிவன், வியாபகன் ஆகையால் இருந்தாங்கு இருந்தபடி அறிவன், உயிர் ஏகதேசன், கால இட எல்லைக்குட்பட்டவன். ஆதலால் எதனையும் அழுந்தி அனுபவித்து அறிவன். சிவன் உயிர்களின்பொருட்டு ஐந்தொழிற் செய்வன்; உயிர் ஐந்தொழிலிற் படுவன். இவைபோல சிவத்துக்கும் உயிர்களுக்கும் பேதம் உண்டு.

எனவே, சிவம் உயிர் இரண்டும் சித்தென ஓரினமே என்றாலும் உயிர் சிவானுபவம் ஒன்றற்கே உரியது. அந்த அனுபவம் சிவமும் உயிரும் தனித்தனியிராமல் ஒன்றெனுமாறு கூடினாலே உண்டாவது. இதுவே சைவசித்தாந்தம் கூறும் சுத்தாத்துவிதமுத்தி.

இந்தச் சுத்தாத்துவித முத்தி நிலையை அடைய உபதேசிக்கப் பெற்ற மார்க்கமே வள்ளி சன்மார்க்கம்.

இந்தச் சன்மார்க்கத்தில் ஒழுகுவோரை முருகன் ஆட்கொள்ளும் நெறியினை வள்ளியை முருகப்பெருமான் காதற் திருமணம் செய்து கொண்ட திருவிளையாடலை ஏதுவாக வைத்து அருணைமுனிவர் கந்தரலங்காரப் பாடலில்(24) விளக்குகின்றார்.

> *"கின்னங் குறித்தடி யேன்செவி நீயன்று கேட்கச்சொன்ன*
> *குன்னங் குறிச்சி வெளியாக்கி விட்டது கோடுகுழல்*

*சின்னங் குறிக்கக் குறிஞ்சிக் கிழவர் சிறுமிதனை*
*முன்னங் குறிச்சியிற் சென்றுகல் யாண முயன்றவனே”*

*(கின்னம் – துயரம். குன்னம் – இரகசியம். குறிச்சி – வேடுவர் வாழிடம். கோடு குழல் சின்னம் – வேட்டுவர்களின் இசைக்கருவிகள்)*

**மு**ருகா! நீ எனக்கு இரகசியம் என்று உபதேசித்த பொருளை வள்ளிமலை வெட்ட வெளிச்சமாகி விட்டது. நீ எனக்கு உபதேசித்த மந்திரத்தின் பொருள் ‘யான் எனது’ என்னும் தற்போதத்தை விடவேண்டும் என்பது. ‘**யாரொருவர் யான் எனது என்னும் ஆணவச் செருக்கற்று என்னை வழிபடுகின்றார்களோ அவர்களுக்கு நான் எளியன்; குற்றேவல் செய்பவன்**’ என்பதல்லவா நீ எனக்கு உபதேசித்த இரகசியம். நீ உபதேசித்த முறையில் உன்னை வழிபட்டவள் வள்ளிப் பிராட்டி. அதனால் அல்லவா நீ அவளுக்கு ‘திருவேளைக்காரன்” ஆனாய். அதனால் அல்லவா, நீ அவள் வாழ்கின்ற குறிச்சிக்குச் சென்று அவள் மகிழும்படியாக பல விளையாடல்கள் நிகழ்த்தி, அவளுக்குக் குற்றேவல் செய்து, அவளைத் திருமணமும் செய்து கொண்டு உன் தேவியாக்கிக் கொண்டாய். முருகா! நீ நான் பிறவிநோய் நீங்கி வாழும்பொருட்டு என் செவிக்கு மட்டும் கேட்கும்படியாகச் சொன்ன குன்னத்தை (தெய்வ ரகசியத்தை), கோடு குழல் சின்னம் முதலிய இசைக்கருவிகள் முழங்க நீ வள்ளியைத் திருமணம் செய்து கொண்ட இடமாகிய குறிச்சி ஊருலகம் எல்லாம் அறிய வெட்ட வெளியாக்கிவிட்டதே. தெய்வ ரகசியத்தை கொட்டுமுழக்கோடு வெளியிடுவதாக அல்லவா இச்செயல் உள்ளது?!” எனக் கேட்டு அருணகிரிநாத சுவாமிகள் முருகப் பெருமானைப் பழிப்பதுபோலக் கொண்டாடுகின்றார்.



**கா**மனை முனிந்த கடவுட் குமரனாகிய செவ்வேட் பரமன், வள்ளி தனக்காகப் பக்குவப்படுள்ளாள் என நாரதமுனிவர் உரைக்கக் கேட்டு, ‘மையல் மானுட வடிவந் தாங்கினான், வேட்டுவக் கோலத்தைக்கொண்டு குமரன் தோன்றினான், தூண்டியே கன்று காமநோய்க் கவலையுள் வைத்தான்’ எனக் கச்சியப்ப சிவாச்சாரியர் முருகன் தன் தெய்வநிலையை விட்டு வள்ளியின் பொருட்டு மையல் மானுடனாய் வந்த எளிமையைப் பாடுகின்றார்.

**வ**ள்ளியின் மனத்தைத் தன்பால் ஈர்க்க முருகன் மேற்கொண்ட திருவிளையாடல்கள் அனைத்தும் தமிழ் அகப்பொருள் இலக்கணத்திற்கேற்ப அமைந்திருப்பதால் அவை, கந்தபுராணத்தில் வள்ளியம்மை திருமணப்படலத்திலும் திருத்தணிகைப் புராணத்தில் களவியற் படலத்திலும் காவியச் சுவை படப் பாடப்பட்டுள்ளன.

**அ**ந்த நிகழ்ச்சிகள் அருணகிரிநாதப் பெருமானால் திருப்புகழிலும் பாடப்பட்டுள்ளன. இவ்விரு புராணங்களிலும் சொல்லப்படாத பலதிருவிளையாடல்களும் திருப்புகழில் பாடப்பெற்றுள்ளன. அவை வள்ளி மீது முருகன் கொண்ட அளவிலா மோகத்தை (அதாவது, அடியவர்மீது இறைவன் கொண்டுள்ள கருணையை) வெளிப்படுத்துகின்றன.

**மு**ருகன் வள்ளி மீது கொண்ட காதலை விளக்கும் பல திருப்புகழ் பாடல்களில் சிருங்கார ரசம் கொப்பளித்துப் பொங்குகின்றது.

*“வேடுவர் சிறுமி ஒருத்திக்கு*
*யான் வழி அடிமை எனச்செப்பி*
*வீறுள அடியினைப்பற்றிப் – பலகாலும்*
*வேதமும் அமரரும் மெய்ச்சக்ர*

> *வாளமும் அறிய விலைப்பட்டு*
> *மேருவில் மிகவும் எழுத்திட்ட – பெருமாளே”*
>
> *(திருப்புகழ், 1199)*
>
> *”கொங்கைக் கொப்பாகும் வடகிரி*
> *செங்கைக் கொப்பாகும் நறுமலர்*
> *கொண்டைக் கொப்பாகும் முகிலென – வருமாதைக்*
> *கும்பிட்டுக் காதல் குனகிய*
> *இன்பச்சொற் பாடும் இளையவ”*
>
> *(திருப்புகழ், 945)*
>
> *”குறப்பொற் கொம்பை முன்*
> *புனத்தில் செங்கரம்*
> *குவித்துக் கும்பிடும் – பெருமாளே”*
>
> *… ஒரு*
> *பெண் காதலொடு வனமேவி வளிநாயகியை*
> *இன்பமான தேனிரச மார்முலை விடாத கர – மணிமார்பா”*
>
> *(வங்கார மார்பிலணி)*
>
> *… புனம் வாழும்*
> *கோலப்பெண் வாகு கண்டு*
> *மாலுற்று வேளைகொண்டு*
> *கூடிக் குலாவும் பெருமாளே”*
> *(திருப்புகழ், 1241)*
>
> *மதனன்விடு புட்பசர படலமுடல் அத்தனையும்*
> *மடலெழுதி நிற்குமதி மோகத் தபோதனன்”*
>
> *(வேடிச்சி காவலன்)*

**ந**ற்பண்புகளையுடைய தம்பதியரிடையே அமைந்த நற்காமம் பத்தியாக, சிவ- சக்தி ஐக்கிய அனுபவமாக அமையும்.. நற்காமம் தம்பதியரிடையே உயர்ந்த அனுபவத்திற்கு வழியமைக்கும்.

**ல**லிதாம்பிகை ”சிருங்காரரச சம்பூர்ணா” என எம்பிரானைத் தன்வசப் படுத்துகின்றாள். அச்செயல் அவள் பொருட்டன்று; அவளீன்ற பிள்ளைகளாகிய உயிர்களின் நலன் கருதி. லலிதையின் பலநாமங்கள் அவள் காமேஸ்வரனை சிருங்காரத்தில் அன்புகாட்டித் தன் வசப்படுத்தலை வெளிப்படுத்துகின்றன. ‘காமகலா ரூபா”, “காமகேளீ”, “காமகோடிகா”, “காமதாயினி”, “காமசேவிதா”, “காமேசக்ஞாத ஸௌபாக்ய மார்த்தவோரு த்வயான்விதா”. “ரமண லம்படா” (தன்னுடைய பதியுடன் ரமிப்பதில் ஆசையுடையவள். ரமணம் – சம்போகம்,கிரீடை), என்னும் நாமங்கள் அம்பிகையின் ஸ்ருங்காரத்தை வெளிப்படுத்துகின்றன.

**அ**பிராமி அந்தாதியிலும் அம்மையின் சிருங்காரரசத்தை வெளிப்படுத்தும் பாடல்கள் உள்ளன.

> *“அதிசய மான வடிவுடை யாளர விந்தமெல்லாந்*
> *துதிசய வானன சுந்தர வல்லி துணையிரதி*
> *பதிசய மான தபசய மாகமுன் பார்த்தவர்தம்*
> *மதிசய மாகவன் றோவாம பாகத்தை வவ்வியதே* ***(17)***

*(தமது வேலைக்காரனாகிய மன்மதன்பொருட்டுத் தமது நாயகராகிய சிவபெருமானது புத்தி குன்றும்படி அவரது வாமபாகத்தை வெளவிய அபிராமிதேவி தமதன்பனாகிய தமியேனுக்கு அனுக்கிரகத்தைச் செய்யாதொழியார். மதிசயமாக – புத்திசயமாக)*

*"இடங்கொண்டு விம்மி யிணைகொண் டிறுகி யிளகிமுத்து*
*வடங்கொண்ட கொங்கை மலைகொண் டிறைவர் வலியநெஞ்சை*
*நடங்கொண்ட கொள்கை நலங்கொண்ட நாயகி நல்லரவின்*
*படங்கொண்ட வல்குற் பனிமொழி வேதப் பரிபுரையே" **(42)***

*(ஸ்தனங்களாகிய மலையரணையும் அல்குலாகிய தேரினையும் போர்த்துணையாகக் கொண்டு இறைவரது வலிய நெஞ்சை வென்று அந்நெஞ்சைத் தமக்கு நடனத் தானமாகத் திறைகொண்டவர்)*

*"ககனமும் வானும் புவனமுங் காணவிற் காமனங்கந்*
*தகனமுன் செய்த தவப்பெரு மாற்குத் தடக்கையுஞ்செம்*
*முகனுமுந் நான்கிரு மூன்றேனத் தோன்றிய மூதறிவின்*
*மகனுமுண் டாயதன் றோவல்லி நீசெய்த வல்லபமே" **(65)***

*(அபிராமிதேவியே, தங்களுடைய வல்லமையினால், யோகமூர்த்தியாய் ஞானோபதேசம் செய்து கொண்டிருந்த தட்சிணாமூர்த்திக்கும் ஷண்முகக் கடவுளாகிய ஒரு குழந்தை உண்டாய தென்றால், தேவி!, நும் வல்லமைக்கு முடியாத காரியம் ஒன்றும் இல்லை)*

*"தைவந்து நின்னடித் தாமரை சூடிய சங்கரற்குக்*
*கைவந்த தீயும் தலைவந்த ஆறும் கரந்ததெங்கே*
*மெய்வந்த நெஞ்சினல்லால் ஒருகாலும் விரகர்தங்கள்*
*பொய்வந்த நெஞ்சில் புகவறி யாமடப் பூங்குயிலே" **(98)***

*(பூங்குயில் போன்ற அபிராமிதேவியே!, தங்களுடைய திருவடித்தாமரைகளை வருடிப் பின் சிரசிற் சூடி ஊடல் தீர்த்த சிவபெருமானுக்குப் பற்றிச் சூடுதற்குக் கருவியாகிய தம்முடைய திருக்கரத்திலுள்ள ஓமாக்கினிநெருப்பும் சூடுதற்கு இடமாயுள்ள சிரசின்கண் உள்ள கங்காநதியும் அப்படித் திருவடிகளைப் பற்றிச் சூடும்போது எவ்விடத்திலே ஒளித்துக்கொண்டன திருவாய் மலர்ந்தருளுக)*

**ந**ற்காமம் பத்தியனுபவத்துக்குத் தடையன்று. இயல்பாகக் குழந்தையின் மேலுள்ள பாசத்தை அக்குழந்தையை முருகனாகவும் கண்ணனாகவும் பாவித்து, அக்குழந்தையைப் பேணும் செயலை இறைவழிபாடாக மாற்றிக் கொள்ளுதலைப் போல, இயல்பாகத் தம்பதியருக்குள் இருக்கும் நற்காமத்தை சிவசத்தி ஐக்கிய பாவனையால் சிவானுபவமாகவும் தாம்பத்திய வாழ்க்கையே சக்தி உபாசனையாகவும் மடை மாற்றம் செய்து கொள்ளும் வழியைப் பெரியோர்கள் அருளி யுள்ளார்கள். சைவமரபில், பெண்கள், பாவை நோன்பிருந்து, சிவனடியார்களே தங்களுக்குக் கணவனாக வாய்க்கப்பெற வேண்டும் என பெருமானிடம் வேண்டினார்கள். கணவனுக்குச் செய்யும் உபசாரங்களே சிவபூசையாக அமையும் பேறு அதனால் வாய்த்தது. பெண்ணுக்குச் சொன்னது ஆணுக்கும் பொருந்தும்.

**அ**வரவர்க்கு உகந்த மார்க்கத்தைக் கைக்கொண்டு ஒழுகி இறையருளைப் பெற வைதிகம்,இந்து தருமம் அனுமதிக்கின்றது.

**வ**ள்ளி மீது முருகன் கொண்ட மோகத்தை வெளிப்படுத்தும் பாடல்கள் ஜெயதேவரின் அஷ்டபதிக்கு நிகராகக் காதலின்பத்தை வெளிப்படையாகப் பாடுகின்றன. வடநாட்டு பக்தி மரபு தமிழ்நாட்டில் வேர்கொண்டபோது அஷ்டபதி பாடி இராதாகல்யாணம், சீதாகல்யாணம் , திவ்யநாம பஜனை ஆகியனவற்றை மகோற்சவமாகக் கொண்டாடும் மரபு திருவிடைமருதூர், கும்பகோணம், பாலக்காடு முதலிய பகுதிகளில் பிராமணர்களால் மேற்கொள்ளப்பட்டது.

**தி**ருப்புகழ்வழி வள்ளி திருக்கல்யாணம் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வள்ளிமலைச்சுவாமிகள் என்னும் மகானால் உருவாக்கப்பட்டது. திருப்புகழின் பெருமையை





உலகறியச் செய்த பெருமை இம்மகானுக்கே உரியது. அர்த்தனாரி எனப் பூர்வாசிரமப் பெயர்கொண்ட இப்பெருமான், மைசூர் அரண்மனையில் தலைமைச் சமையற்காரராகப் பணியாற்றி வந்தார். வினை வயத்தால் அருமை மனைவி மக்கள் ஆகியோரை இழந்து விரக்தியோடு திருப்பழனிக்கு வந்தார். அங்கு பூரணநிலவொளியில் திருக்கோயில் தாசி, சுவாமி ஊர்வலத்தின்போது, 'வங்கார மார்பிலணி' எனத் தொடங்கும் திருச்செங்காட்டங்குடித் திருப்புகழுக்கு அற்புதமாக அபிநயம் செய்தாடினாள். தமிழ் எழுதப் படிக்க அறியாத அர்த்தனாரிக்கு இந்த நிகழ்ச்சி திருவருள் விளக்கமாக அமைந்தது. முருகன் அர்த்தனாரியை இந்த நிகழ்ச்சியின் வழியே ஆட்கொண்டான். இந்தத் திருப்பாடலை அறிய வேண்டும் என்பதற்காகவே அர்த்தனாரி தமிழ் எழுதப்படிக்கத் தொடங்கினார். திருப்புகழ் அவரைப் பற்றிக் கொண்டது. வள்ளியம்மை அவருக்குக் குருவானார். வள்ளித் தாயைப் 'பொங்கி' எனப் பெயர் சூட்டிக் கொண்டாடினார். அர்த்தனாரி வள்ளிமலைச்சுவாமிகள் ஆனார். வள்ளிமலைச் சுவாமிகள் தம்மை வள்ளியாகவே பாவித்து கொண்டார். முருகனைக் காட்டிலும் வள்ளியை ஆராதிப்பதில் பெருமகிழ்ச்சி கொண்டார். வேதா முதல் விண்ணவர் சூடும் மலர்ப் பாதனாகிய முருகனே வள்ளியை அல்லது பிறரைத் துதியா விரதன்தானே!



குருஜி டாக்டர் ராகவன்

**கொ**ச்சி சமஸ்தானத்து தலைமை நீதியரசராகவும் பின்னர் சென்னையில் புகழ்பெற்ற வழக்கறிஞராகவும் விளங்கிய டி.எம். கிருஷ்ணசுவாமி ஐயர், வடக்குப்பட்டு சுப்பிரமணிய பிள்ளை, சாது பார்த்தசாரதி சுவாமிகள் போன்றோர் இவருடைய சீடர்களானார்கள்.

**வ**ள்ளி திருக்கலியாண மகோற்சவம் கொண்டாடுவதில் இரு பத்ததிகள் இன்று நிலவுகின்றன. ஒன்று, வள்ளிமலைச்சுவாமிகள் அமைத்த பத்ததி. மற்றொன்று குருஜி டெல்லி இராகவன் அவர்கள் உருவாக்கித் திருப்புகழ் அன்பர்கள் மேற்கொண்டுள்ள பத்ததி.

**க**ந்த சஷ்டி விரதத்தை வள்ளி திருக்கலியாண மகோற்சவமாகக் கொண்டாடி நிறைவு செய்வோம்.



**ந**ன்மணம் விரும்பி வள்ளி சமேத முருகப்பெருமானை வழிபடுதல் சிலப்பதிகாரகாலத்துக்கும் முந்திய மரபு.

> *குறமக ளவளெம குலமக ளவளொடும்*
> *அறுமுக வொருவனின் னடியிணை தொழுதேம்;*
> *துறைமிசை நினதிரு திருவடி தொடுநர்*
> *பெருகநன் மணம்விடு பிழைமண மெனவே"*
>
> *(சிலப்பதிகாரம், குன்றக்குரவை).*

**குறிச்சொற்கள்:** அத்வைதம், அபிராமி அந்தாதி, அருணகிரிநாதர், கணவன் மனைவி உறவு, கந்த சஷ்டி, கந்தபுராணம், காதல், காமம், கௌமாரம், சாக்தம், சிவசக்தி, தாந்திரீகம், தாம்பத்தியம், திருப்புகழ், திருமணம், தெய்வயானை, தேவி, நற்காமம், முருகன், லலிதா சகஸ்ரநாமம், வள்ளி, வள்ளி திருமணம்

## 8 மறுமொழிகள் *வள்ளிச் சன்மார்க்கம்*

*சிவஸ்ரீ. விபூதிபூஷண்* **on October 28, 2011 at 12:05 pm**



வள்ளி சன்மார்கம் என்னும் முனைவர் ஐயாவின் கட்டுரையை ப்படிக்கும்போது நெஞ்சம் நெகிழ்கிறது. கந்த சஷ்டியை தொடர்ந்து வள்ளி திருமணமாக வழிபாட்டை நிறைவு செய்யவேண்டும் என்ற ஐயா அவர்களின் வேண்டுகோள் முருகனடியார்களால் பின்பற்றத்தகுந்தது. சன்மார்கம் என்றால் இறைவனை குருவாகக் கருதி சிவஞானம் அடைதல் என்று மட்டுமே புரிந்திருந்தேன்.
இறைவனை காதலனாகக் கருதலும் சன்மார்கமே என்ற அறிய கருத்தை இந்த கட்டுரை இனிமையாக எளிமையாக சொன்னது. இறைவன் உண்மையான அன்புகொண்ட பக்தரைத்தேடி காதலியைத்தேடிவரும் காதலனைப்போல ஒடி வருவான் திருவிளையாடல் புரிவான் என்பது சத்தியம் என்பதை வள்ளிதிருமணமும் வள்ளிமலைசுவாமிகளின் வரலாறும் சொல்கின்றன.
இந்தகட்டுரை தெளிவாக சிவாத்வைத முத்தியை விளக்கி இருக்கிறது. முத்தி நிலையில் சிவம் ஆன்மா ஆகியன இருந்தாலும் அவை இரண்டுமல்ல ஒன்றுமல்ல என்று அத்துவிதம் சைவசித்தாந்த நோக்கில் தெளிவு படுத்துகிறது.
முனைவர் ஐயா அவர்களுக்கும் தமிழ் ஹிந்து ஆசிரியர் குழுவிற்கும் நன்றிகள்
அனைவருக்கும் கந்த சஷ்டி மற்றும் வள்ளிகல்யாண விழா வாழ்த்துக்கள்.
சிவஸ்ரீ. விபூதிபூஷண்